

# திருக்குறள்

**பொய்மையும் வாய்மை இடத்த புரைதீர்ந்த**
**நன்மை பயக்கும் எனின்** *(வாய்மை 292)*

பொய்கூட வாய்மையின் இடத்தை எட்டுவது உண்டு. அதனால் குற்றம் விளையாமல் நன்மை ஏற்படுமானால்.

உரை: **கவிஞர் சிற்பி**

## ஆசிரியர் பக்கம்

### எண் 108 ஒரு மந்திர அளவு!

108 எனும் கருதுகோள் நமது பண்டைய ஞானக்கூற்றின் முடிவில் ஒரு வியத்தகு எண்ணின் நுட்பத்தைச் சொல்கிறது. ஜபமாலை மணிகள் 108. இறைவன் இறைவியின் நாபஜபத்திற்கும் இதுவே. 108 முறை மந்திரம் சொல்லி பூப்பலி இடுதல் என்பதும் அறிந்ததே. இந்த 108 மணிகளால் விரல்கள் உருட்டுவது, ஜபம் செய்வது என்பவை ஓர் ஆன்மா தன்னுள் இருக்கும் இறைமையுடன் இணைவதற்கு எடுக்கும் படிநிலைகள் என்கின்றனர் பெரியவர்கள். இந்தியாவில் உள்ள இந்துக்கள், பௌத்தர்கள், ஜைனர்கள், சீக்கியர்கள் மற்றும் சீன தாவோயிஸ்டுகள் என அனைத்து சமயத்தவருமே இவ்வுலகம் பிரபஞ்சப் பிரக்ஞையுடன் தொடர்புகொள்ள 108 உதவும் என்று நம்புகின்றனர்.

நம்முடைய முன்னோர்கள் வேதங்களின் வழியே வானசாஸ்திரம் பற்றிய பதிவுகளைத் தந்துள்ளனர். அவற்றிலிருந்து நமக்குக் கிடைக்கும் மெய்ஞானச் செய்திகள் இவை:

1. பூமிக்கும் நிலாவிற்கும் இடைப்பட்ட தூரம் நிலாவின் குறுக்களவின் 108 மடங்கு.
2. பூமிக்கும் சூரியனுக்கும் இடைப்பட்ட தூரம் சூரியனின் குறுக்களவின் 108 மடங்கு.
3. சூரியனின் குறுக்களவு பூமியின் குறுக்களவின் 108 மடங்கு.
4. ஆயுர்வேதம் சொல்லுகிறது என்னவெனில் உடம்பிற்கு வாழும் உயிர்ப்பினைத் தந்து உணர்வு நிலையை வளர்த்தெடுக்கும் ஆதாரப் புள்ளிகள் எனும் 108- மின் புள்ளிகள் (மர்மப் புள்ளிகள்) உடலெங்கும் சங்கிலி கோர்த்துச் செல்லுகின்றன.
5. அதேபோல மறைபொருளாய் ஸ்ரீசக்கர யந்திரத்தின் உள்ளே நிலைநிறுத்துகின்றன 54 சக்திப்புள்ளிகள். இருநிலையில் ஆண்சக்தியும், பெண்சக்தியுமாய் 108. வேதஜோதிட முறையில் சொர்க்கத்தை நிச்சயிக்கும் 27 நட்சத்திரங்கள் சந்திரனின் அடையாளங்கள் – நான்கு பாதங்களை உள்ளடக்கி 108 வகையான அடிப்படை மனித இயல்புகளை விளக்க வல்லவை என்கின்றனர் காலநிர்ணயப் பேராசான்கள். இந்திய காலநிர்ணயக்கலையில் 9 கோள்கள் – 12 வீடுகள் என வகுத்துள்ளனர். பெருக்கினால் 108. தாந்திரம் விஞ்ஞானத்தில் நமது சராசரி பிராண மூச்சு இழை ஒரு நாளைக்கு 21, 600. இவற்றுள் 10, 800 சூரிய ஆற்றல் 10,800 சந்திர ஆற்றல் 108 இங்கே 100 ஆல் பெருக்கப்பட்டுள்ளதை அறியலாம். இந்திய பரத நாட்டிய சாஸ்திரத்தில் கூறப்படும் பாத அசைவுகள், கை முத்திரைகள் இணைந்த கரணங்கள் 108 என்று இப்படி இப்படி இன்னும் தேடிக்கண்டடையலாம்.

அ இ உ எ ஐ ஒ X 18 = 108. ஒரு வேளை தமிழ் எழுத்துகள்கூட அ இ உ எ ஐ ஒ எனும் ஆறு உயிர்க்குறில்களும் பதினெட்டு மெய்எழுத்துகளும் அடிப்படை எனக்கொண்டால் 108 பெருகும் ஓசைகள்தானே என எனது சிற்றறிவு சொல்கிறது! பிறகு அதன் நீட்சியாக 216 (108+108) + ஃ தனி) இப்படியாக நம்முன்னோர்கள் மெய்ஞான விஞ்ஞான பூர்வமாகப் பகுத்தறிந்துள்ளபடி ஒவ்வொன்றின் தொடர்பு, வடிவமைப்பு மற்றும் இம்முழுப்பிரபஞ்சத்தின் ஒழுங்கமைதி எல்லாமே நிலைபெற்றுள்ள இயக்கத்தின் கண்ணிகள். அவ்வகையில் இந்த எண்108 பெரும் கண்டுபிடிப்பு இந்தியத்தொலைநோக்கு மெய்அறிவின் வெளிப்பாடு!. சுபகிருது ஆண்டின் துவக்கத்திலேயே இந்த எண் 108 எமது தூக்கத்தைப்போக்கி நிமிர்ச்சி தருகிறது!.

இம்மடலை எழுதுவதற்கு எனக்கு உத்வேகம் தந்தது ஓர் அற்புதமான ஆங்கில நூல். ஹைதராபாத் விவேகானந்தா மனிதப் பேரறிவு மையத்தின் வெளியீடு. நீங்களும் படித்துப்பாருங்களேன். .

புத்தாண்டு வாழ்த்தோடு 108 வணக்கங்களுடன்



இரா.மீனாட்சி.

## அன்னையின் பிரார்த்தனை



ஒவ்வொரு நாளும் நான் எழுத விரும்பும் வேளையில் ஏதோ ஒன்று குறுக்கிடுவதை உணர்கிறேன். இதிலிருந்து எங்கள் வாழ்வில் இப்போது புதிதாகத் தொடங்கியுள்ள காலம் என்றும், அவ்வளவுக்கு ஒருமுனைப்பட்டு தியானத்தில் ஈடுபடும் காலம் அன்று என்றும் இது நமக்கு உணர்த்து கிறது. ஒவ்வொரு கணமும் செயல்கள்மூலம் நாங்கள் நினக்குப் பணிசெய்து, நின்னுடன் ஐக்கியப்பட வேண்டுமே யொழிய ஆழ்ந்த மௌனமான தியானத்திலும் எழுத்து மூலமோ, வேறெவ்வாறோ செய்யும் பிரார்த்தனையிலும் ஈடுபட்டிருப்பது போதாது. ஆனால் என் உள்ளம் நின் புகழ் பாடுவதில் சலிப்பதே கிடையாது. என் சிந்தனை முழுவதிலும் நீயே இடைவிடாது நிரம்பியுள்ளாய்..

**ஸ்ரீஅன்னை**

## சிதம்பர ரகசியங்கள்

வானவியல் கணக்கீடுகளின்படி சிதம்பரம் – காஞ்சி ஏகாம்பரேஸ்வரர்– காளஹஸ்தி ஆலயங்கள் ஒரே நேர்கோட்டில் ஈர்ப்புடன் அமைந்துள்ளனவாம்.

ஓம் என்னும் வடிவில் நடனமிடும் பொற்சபை நடராஜரின் திருவடியிலிருந்தே உலகத்தின் மைய ரேகை தொடங்குவதாக புவியியல் அறிஞர்கள் கூறுகின்றனர்.

சிதம்பரம் திருக்கோவிலில் வேயப்பட்டுள்ள பொன் ஓடுகளின் எண்ணிக்கை 21,600 – இது சராசரியாக மனிதனின் ஒருநாள் சுவாசக் கணக்கு 15 X 60 நிமி = 900 X 24 மணி = 21, 600. பொற்சபை மீதுள்ள ஒன்பது துவாரங்கள் நமது மனித உடலிலுள்ள ஒன்பது துளைகளைக் குறிப்பதாகும். உடம்பே கோவில் என்பதை நமக்கு உணர்த்தவே இப்படி அமைக்கப்பட்டுள்ளதாம்.

நடராஜரின் நடனம் சிவனின் தாண்டவம் எனப்படும். இதனை Dance of Siva என்று ஆங்கிலத்தில் கலைவளப் பேரறிஞர் ஆனந்த குமாரசாமி எழுதியுள்ள நூலை இலங்கை நவாலியூர் நடராசா தமிழில் சிவதாண்டவம் என்று மொழிபெயர்த்துள்ளார். (44 ஆண்டுகளுக்கு முன்னே நவாலியூர் நடராசா நமது கல்விமையத்தில் சில மாதங்கள் தங்கி இருந்தார். அவினாசியில் 1978-இல் பாரதிசிலை திறப்புவிழாவை நடத்தியபோது உடன் கலந்து கொண்டார். ஆனந்த குமாரசாமியும் இலங்கை நவாலியூரைச் சேர்ந்தவர் என்பது கூடுதல் தகவல்!)



### வாசகர் குரல்

மார்ச் 2022 இதழில் வெளியான குல்சாரிலால் நந்தா பற்றிய செய்தி மெய்சிலிர்க்கச் செய்தது. இந்தியப் பிரதமராக இருந்த இவர் வரலாறு மாணவர்களுக்குப் பாடநூலில் சேர்த்து கற்பிக்க வேண்டும்.

**பா. கமலக்கண்ணன், புதுச்சேரி-13.**

நீங்கள் உங்கள் சிந்தனைகளை சேவைகளை உங்கள் மடல் வாயிலாக ஓரிரு பக்கங்களில் வெளியிட்டுவருகிறீர்கள். ஆனால் நான் உங்கள் எண்ணங்களையும் ஏற்றமிகு தொண்டினையும் பாராட்ட முழு பத்திரிகையே போதாது..

**கஸ்தூரி ஜெயராமன், சென்னை.**

## கேட்டதும் கிடைத்ததும்

என் வேண்டாத பழக்க வழக்கங்களை மாற்றிவிடு என்றேன் இறைவனிடம்.

நீயாக எடுத்துக்கொண்டாய் அவற்றை நீதான் மாற்றவேண்டும் என்றான்.

என்னை முழுமையாக்கு என்றேன்.

உன் ஆன்மா முழுமையானதுதானே? என்றான்

எனக்குப் பொறுமையைக் கொடு என்றேன்.

சங்கடங்களுக்கிடையில் உருவாவதுதான் பொறுமை.

அது கொடுத்துப் பெறுவதுஅல்ல, அனுபவித்தே உணரவேண்டும் என்றான்.

எனக்கு மகிழ்ச்சியைக் கொடு என்றேன்.

உனக்கு ஆசிகள் வழங்குகிறேன் சந்தோஷப்படுவது

உன் கையில் தான் உள்ளது. என்றான்.

துன்பங்களிலிருந்து விடுதலைகொடு என்றேன்

துன்பங்கள்தான் உனக்கு உண்மையை உணர்த்தி

என்னிடம் கொண்டுவந்து சேர்க்கின்றன என்றான்.

எனக்குத் துணிவைக்கொடு என்றேன்

மனதில் உறுதியிருந்தால் துணிவு அங்கே பிறக்கும் என்றான்

எனக்கு செல்வத்தைக் கொடு என்றேன்

எது உண்மையான செல்வம் என்பதைத் தெரிந்து கொண்டு வா என்றான்.

எனக்கு அமைதியைக் கொடு என்றேன்.

நல்வொழுக்கம், நல்லஎண்ணம், நன்னடத்தை உள்ள இதயத்தில் அமைதி தானாகப் பிறக்கும் என்றான்.

வாழ்க்கையை அனுபவிக்க வேண்டுவன எல்லாம் கொடு என்றேன்.

வாழ்க்கையைத் தந்துள்ளேனே சீராக வாழ்ந்து நீயாக முயன்று எது வேண்டுமோ தேடிக்கொள் என்றான்.

என்ன அது என்றேன்.

நமட்டுச்சிரிப்புடன் நன்றி என்று சொல்லி உள்ளே மறைந்தான்.

**படைப்பு – திரு. கஸ்தூரி ஜெயராமன்.**
மண்டல இயக்குநர், தொழிலாளர் நலவாரியம்
மேனாள்ஆலோசகர்.

**அனைவருக்கும்
தமிழ்ப் புத்தாண்டு நல்வாழ்த்துகள்**

கட்டுரை

## தாய்லாந்து சிவாலயம்

வேப்பம்பூவும் வெல்லமும் சேர்த்து இளவேனில் பிரசாதம் சாப்பிட்டாயிற்றா? பானகமும், நீர்மோரும் குடித்து ஸ்ரீராமநவமியும் கொண்டாடி இருப்பீர்கள். தமிழ் சுபகிருது ஆண்டு ஏப்ரல் 14-இல் அடியெடுத்து வைக்கிறது. நாம் தமிழ்ப்புத்தாண்டு கொண்டாடுவதுபோலவே தாய்லாந்தில் ஏப்ரல் மாதத்தில் ஓர் இந்துக்கோயிலில் பிரம்மாண்டமான விழா கொண்டாடப்பெறுகிறது. காலையில் உதிக்கும் சூரியனின் ஒளிக்கற்றைகள் கிழக்கு வாயில் வழியே சிவலிங்கத்தின்மீது விழுந்து அந்த லிங்கம் ஜோதி வடிவில் காட்சி தருகிறது. மாலை அஸ்தமனத்தின்போதும் அதே ஜோதியைத் தரிசிக்கலாம், அன்று பகல் முழுதும் ஆலயத்தின் பதினைந்து பலகணிகள் வழி சூரியஒளி பாய்ந்து கோயிலின் உட்பகுதியைப் பிரகாசமடையச் செய்வது ஓர் அபூர்வநிகழ்வு ஆகும். அங்குள்ள திருக்குளங்களின் அழகைச் சொல்லிமுடியாது. அன்றைய தினம் அந்நாட்டுப் பாரம்பரிய முறையில் நாட்டியப் பெண்கள்கூடி நாட்டியமாடி சிறப்பு வழிபாடு செய்கின்றனர்.

தாய்லாந்து நாட்டினைப் பண்டைய நாளில் சயாம் என்றழைத்தனர். அங்கு பூரிராம் பகுதியில் ஃபனோம்ரஸில் உள்ள மலையைக் கயிலாயமலையாகக் கருதி அதன்மேல் ஸ்ரீகயிலாசம் எனும் சிவாலயத்தைப் பண்டைய கெமர் அரசர்கள் கட்டியுள்ளனர்.

மூலஸ்தானத்தில் சிவலிங்கம், வாயில் நிலைக்கால்மேல் உள்ள ஆடவல்லான் அருகே காணப்பெறும் காரைக்காலம்மையாரின் சிற்பம் முதலானவை தமிழ்நாட்டுச் சிற்பிகளின் துணைகொண்டுதான் கெமர் மக்கள் அவ்வாலயத்தினை எடுப்பித்துள்ளனர் என்பதை உறுதி செய்கின்றன. அந்நாட்டிற்கும் சோழ பல்லவ மன்னர்களுக்கும் கடல்வழி உறவு மிகுந்திருந்ததை இன்றளவும் அடையாளம் காணமுடிகிறது. முதலில் சென்றடையும் அந்நாட்டின் துறைமுகம் தக்கோலம் இன்று தகூபா என்றழைக்கப்படுகிறது. இராஜேந்திரசோழனின் கல்வெட்டுகளில் அவன் கடல்கடந்து சென்ற இடங்களின் பட்டியலில் இத்துறைமுகம் தலைத்தக்கோலம் என்று குறிக்கப்பெறுகின்றது. அதனருகில் கிடைத்த ஒரு கற்பலகை கி.பி. 9 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது. அதிலுள்ள செய்தி காவிரிப்பூம்பட்டினத்தைச் சேர்ந்த நாங்கூர் எனும் ஊரினர் ஒருவர் அப்பகுதியில் திருமால், சிவன் ஆகிய தெய்வங்களுக்குக் திருக்கோவில் எடுப்பித்து ஒரு குளமும் உண்டாக்கி அறப்பணி செய்துள்ளார் என்றும் மேலும் மணிக்கிராமத்து வணிகர்களும், அவர்களுக்குத் துணையாகச் சென்ற சேனாமுகத்தார் எனும் படைவீரர்களும் எதிர்காலத்தில் காக்கவேண்டும் எனும் வேண்டுகோளையும் பதிவு செய்துள்ளார்.



அவர் தோண்டிய திருக்குளத்திற்கு அவநிநாராயணம் எனும் பல்லவ மன்னன் தெள்ளாறு எறிந்த நந்திவர்மன் பெயரைச் சூட்டியுள்ளார்.

தமிழ்நாட்டுப்பொன் வணிகர்கள் அங்கு சென்று வந்ததன் ஆதாரமாக குனஅனுபத் எனும் இடத்தில் தங்கத்தை உரசிப் பார்த்து மாற்று அறிய உதவும் ஓர் உரைகல் கிடைத்துள்ளது. அதில் பெரும்பதன்கல் என்ற கி.பி 3 ஆம் நூற்றாண்டு எழுத்துப் பொறிப்பு உள்ளது.

மேலும் விவரங்களை வியப்புடன் படித்து நம் வரலாற்று அறிவையும் தமிழரின் பெருமையையும் உணர்ந்து உய்திபெற ஒரு வழி உண்டு. அது நல்ல வாசகராவதுதான்! ஆழ்ந்து படியுங்கள் இந்த நூலை.

**சிவாலயங்களும் சிவகங்கை வாவிகளும் | திருக்கோவில் கலைச்செல்வர் | குடவாயில் பாலசுப்ரமணியன் | அன்னம், தஞ்சாவூர். | 2021 | ரூ.250.00**

## பாராட்டுகிறோம்.

தமிழ்நாட்டின் ஊரக மற்றும் நகர்ப்புறப் பகுதிகளில் பல வெற்றிகரமான சுகாதார விழிப்புணர்வு இயக்கங்களை நடத்திவரும் கிராமாலயா தொண்டு நிறுவனத்தைச் சிறப்பாகச் இயக்கி வருகின்ற திருச்சி திரு. சே. தாமோதரன் அவர்களுக்கு இந்திய நடுவண் அரசின் உயர்ந்த விருதான பத்மஸ்ரீ விருது வழங்கப்பட்டுள்ளதை நமது அமைதிக்குரல் வட்டத்தின் சகோதரர் என்.பொன்னுசாமி தெரியப்படுத்துகிறார். மேலும் கிராமாலயாவின் தொண்டுகள் சிறக்க வாழ்த்துகிறோம்.

## வரப்பெற்றோம் – இதழ்கள்

- இனிய நந்தவனம் – மக்கள் மேம்பாட்டு மாதஇதழ்.
- ஜனவரி – 2022.
- விடியல் இலக்கிய இதழ் – பிப்ரவரி 2022.
- காவ்யா – அக்டோபர் – மார்ச் 2022. இதழ்.

அனைத்துப் பதிப்பாளர்களின் கடுமையான உழைப்பும் எழுத்து நேசமும் நமது நெஞ்சை நிரப்புகின்றன. நன்றி.

**- ஆசிரியர்**

# நமது ஊர்களில் பயன்தரும் மரம் வளர்ப்போம்

## வளர்க்க வேண்டிய நல் மரங்கள்.

| மரங்களின் பெயர் | அதன் பயன்கள் |
|---|---|
| தேக்கு மரம் | தேக்கு மரக்கட்டையை நீர்விட்டு உரைத்து உடம்பில் பூசினால் புண்கள் குணமாகும். நல்ல உயர்ந்த மரக்கட்டை. |
| தேத்தாங் கொட்டைமரம் | இந்த இலையைத் தண்ணீரில் போட்டு கொதிக்க வைத்துக் குளிக்க உடல்வலி நீங்கும். |
| தேவதாரு மரம் | மரப்பட்டையை உலர்த்தி நெருப்பிலிட்டு புகை எழுப்பி அந்த புகையை முகர்ந்தால் தலைவலி குணமாகும். |
| பப்பாளிமரம் | முற்றாத பப்பாளி இலைகளில் நரம்புகளை நீக்கிவிட்டு, பொடியாக நறுக்கி வேப்ப எண்ணெயில் வதக்கி இளஞ்சூட்டில் வீக்கத்தின் மேல் கனமாக வைத்துக்கட்டினால் 3 நாட்களில் வீக்கம் வற்றிவிடும். பப்பாளிக்காயை தோல்நீக்கி விதைநீக்கி சிறு துண்டுகளாக்கி கழுவி அதனுடன் பாசிப்பருப்பு, கடலைப்பருப்பு சேர்த்தக் கூட்டுசெய்து சாப்பிட்டுவர உடல்பருமன் குறையும். |
| பனைமரம் | பனை ஓலை வேய்ந்த கூரை வீடுகளில் வசிப்பவர்களுக்கு கண்ணோய் வராது. பனைவெல்லம் கலந்த குடிநீர் உடல் வெப்பத்தைத் தணிக்கும். வாதம் பித்தம் கபம் ஆகியன கட்டுப்படும். பனங்குருத்தை உட்கொண்டால் மலச்சிக்கல் நீங்கும். |
| பலாமரம் | பலாக்காயை வற்றல் போட பயன்படுத்தலாம் . பலாப்பழம் உணவுக்குப்பின் சாப்பிட நன்கு ஜீரணமாகும். பித்தம் தணியும் உடல் வலுவடையும். |
| பாதிரி மரம் | முற்றாத இலையை மைபோல் அரைத்து சிறிது எலுமிச்சை பழச்சாறு சேர்த்துக்குழைத்து தலையில் தேய்த்துக்குளிக்க தலைசுற்றல், உச்சிஎரிச்சல் ஆகியன குணமாகும். |
| பாக்கு மரம் | முற்றாத பாக்கை மென்று சிறிதுநேரம் வாயில் அடக்கி வைத்திருந்து துப்பிவந்தால் வாய்நாற்றம், வாய்ப்புண்ஆகியவை குணமாகும். முற்றாத பாக்குடன் சிறிது ஜாதிக்காய், கிராம்பு ஆகியனவற்றைச் சேர்த்து மென்று விழுங்கினால் மலச்சிக்கல் நீங்கும் ஜீரணம் ஒழுங்காகும். |
| புளியமரம் | புளியமரத்தின் இலையை வதக்கி எடுத்து அதை 2 லிட்டர் தண்ணீரில் போட்டு மூடி கொதிக்க வைத்து, புண்களின் மேல் ஊற்றிக் கழுவிவர நாட்பட்ட சீழ்ப்பிடித்த புண்கள் குணமாகும். |
| புங்கமரம் | புங்கவிதை 200 கிராம் சம்பங்கி விதை 100 கிராம் இரண்டையும் அரைத்து சிறுஅடைகளாகத் தட்டி நிழலில் உலர்த்தி வைத்துக்கொள்ளவும் இதில் தேவையான அளவு எடுத்து வெந்நீரில் சந்தனம் போலக் குழைத்து தோல் மேலே பூச கரப்பான் கால்புண், படை சொறி ஆகியன குணமாகும். |
| பூவரசுமரம் | இலையை அரைத்து வயிற்றுப் பகுதியில் பற்றுப் போட உண்ட உணவு ஜீரணமாகும். முற்றாதகாயை அரைத்துப் பற்றுப்போட்டு வர யானைக்கால் நோய் குணமாகும். |

தகவல்:- **டாக்டர். C.R.L. நரசிம்மன்,** வேளாண்துறை வல்லுநர், கோவை.

**மரம் மேலும் வளரும்**



புதியதில் ஈர்த்தது

# தேடுகல்வியில் திருப்புமுனை

யாதானும் நாடாமால் ஊராமால் என்னொருவன்
சாந்துணையும் கல்லாத வாறு (குறள்)

வாழ்நாள் முழுவதும் கற்றல் திட்டம்
(Life Long Learning Programme)

இந்தத் திட்டத்தின்படி விருப்பமுள்ள எந்த வயதினரும் தங்களது கல்வியறிவை மேம்படுத்திக்கொள்ளலாம். இதில், மொழி, இனம், ஜாதி, பாலினம், வயது, சமூகம், பொருளாதாரம் போன்ற வேறுபாடுகள் எதுவும் தடையாக இருக்க வாய்ப்பில்லை. இதுபோன்ற வாய்ப்பு கிடைக்கப்பெற்ற எவரும் தமது அறிவுத்திறனை மேம்படுத்திக்கொள்ளவும், அதன்மூலம் பற்பல திறன்களை வளர்ப்பதற்கும், சமூக உயர்வுக்குப் பாடுபடவும் அவற்றை வாழ்நாள் முழுவதற்கும் பயன்படுத்திக்கொள்ளவும் வழிஏற்படும்.

வாழ்நாள் பயிற்சி என்பது ஒரு தாயன்புக்கு இணையானது, இதுவே வழக்கமான கல்வி கற்கும் கல்வியிலிருந்து வழக்கத்துக்கு மாறான முறையில் தேர்ச்சிபெறவும், எல்லையற்ற முறைகளில் தங்களை மேம்படுத்திக்கொள்ளவும் சாத்தியப்படுத்துகிறது.

இத்தகைய அணுகுமுறை மனித ஆற்றலை மேம்படுத்தவும் வாழ்க்கையைத் தரமுள்ளதாக மாற்றவும் உதவும்.

இத்திட்டத்தைச் செயல்படுத்துவதால் வேலை செய்யுமிடத்தில் ஒருவரது திறமை சிறப்பாக மேலோங்கி இருக்கக் காணலாம். பிற சகமனிதர்களுடன் இணைந்து சமூகப் பாரம்பரியக் கூட்டு வாழ்க்கைக்கு இணக்கமான வழிமுறைகளைப் பின்பற்றவும் உதவுகிறது. அதுவே தேசத்தின் ஒட்டுமொத்த முன்னேற்றத்துக்கு அடிப்படையாகவும் அமைந்து விடுகிறது.

வாழ்நாள் முழுதும் இதுபோன்ற செயல்பாடுகளால் வயதுவந்தோர் தொடர்ந்து கல்வியறிவு பெறவும், தனிநபர் கல்விகற்று மேன்மையடையவும் வழிஏற்படும். கூட்டுக்கல்விக்கும், சமூகக்கல்விக்கும், திறந்தவெளிக் கல்விமுறை உதவுகிறது. வேளாண்கல்வி, பொருளாதாரக்கல்வி, தொழிற்கல்வி, பிறவேலைசார்ந்த கல்விகளின் மூலம் அறிவுத்திறனை பெருக்கிக்கொள்ளவும், வேலைக்கேற்ற கல்வியறிவு பெறவும், பெற்றோர் கல்வியறிவு பெறவும் உதவும். வேலையிலிருந்து ஓய்வு பெறுவதற்கு முன்பும், பிறகும் தத்தமது வாழ்க்கையைச் சிறப்பாக அமைத்துக்கொள்ளவும் வழிஏற்படுத்திக்கொடுக்கும். வாழ்க்கைக்குத் தேவையான பல சிறப்பு நிலைகள் பெறவும், தனிமனித ஒழுக்கத்திலிருந்து சமூக இயக்கங்கள்வரை பல நிலைகளில் தங்களை மேம்படுத்திக்கொள்ளவும் உதவும்.

இத்திட்டத்தின்படி ஆரம்ப நிலைகளில் துவக்கப்பள்ளி, நடுநிலைப்பள்ளி, மற்றும் மேல்நிலைப்பள்ளிகளில் கட்டமைக்கவேண்டிய நிறுவன செயல்பாடுகள், புத்தகசாலைகள், வரலாற்று ஆவண சேகரிப்பு, பாதுகாப்பு போன்ற பலவகை முயற்சிகளை பலதுறைசார்ந்த வல்லுநர்களுடன் கலந்து வாய்ப்புகளைப் பரவலாக்குதல் வேண்டும்.

நம் நாட்டில் வாழ்நாள் முழுவதும் கல்விகற்பிக்கத்தக்க வழிவகைகளை ஆராய்ச்சி செய்தும் பரிசோதனைகள் மேற்கொண்டும் சரியான, முறையான திட்டங்களை ஏற்படுத்திப் பயன்பெறுதல் வேண்டும்.

வயது முதிர்ந்த மக்களின் கல்வி மேம்பாட்டுக்கு ஏற்புடைய வளாகங்களை மாநிலத்திலும், பிற மாநிலங்களுக்கிடையேயும் அமைப்பதன்மூலம் அந்தப்பிராந்தியங்களின் ஒட்டுமொத்த வளர்ச்சிக்கு ஒத்துழைத்தல் நிகழும்.

வாழ்நாள் முழுவதும் கல்விகற்கவும், கற்பிக்கவும், புதுப்புது வழிவகைகளில் முயற்சிசெய்யத் தேவையான நிதிவசதிகளைப் பெருக்குவதில் கவனம் செலுத்துதல் அவசியமாகும்.

நீண்டகால செயல்பாட்டிற்குத் தேவையான அடிப்படை வசதிகளை மேற்கொள்ளவேண்டும். அதற்கு.

திட்டமிடுதல் மற்றும் குறிப்பிட்ட இடைவெளிகளில் மாநில அளவில் மதிப்பீடு செய்தல், சமூகங்களுக்கிடையே சமமான பகிர்வு கிடைக்க ஆவன செய்தல், குறிப்பாக பெண்கள், மாற்றுத்திறனாளிகள் மற்றும் முறையான வாய்ப்பு அமையப்பெறாதோர் போன்ற பலரையும் அரவணைத்துக்கொள்ளுதல்.

மத்திய மாநில மற்றும் உள்ளூர் அமைப்புகளிடையே ஏற்படவேண்டிய தொடர் தொடர்புகளுக்கான சூழ்நிலைகளை உருவாக்குதல், அவற்றின்வழியே கலாச்சாரப் பிணைப்புகளுடன் கூடிய கல்விக் கூடங்களை ஏற்படுத்திச் செயல்படுத்துதல்.

இது போன்ற அமைப்புகள் தொடர்ந்து செயல்படத் தேவையான நிதி ஆதாரங்களைக் கண்டறிந்து பயன்படுத்துதல்.

இதற்குத் தேவையான பிற மாற்று வழிகளையும் ஆராயவேண்டும்.

ஆராய்ச்சி மற்றும் அபிவிருத்தித்திட்டங்கள்

வயது வந்தோர்க்குப் போதிக்கத் தகுந்த ஆர்வலர்களை அமர்த்தி அவர்களுக்குத் தேவையான பயிற்சி மற்றும் மறு ஆக்கப்பயிற்சிகளை மேற்கொள்ளுதல்.

தொடர்கல்வி கற்பிக்கத் தேவையான திட்டங்களை வகுத்தும், அவற்றை முறையாகப்பின்பற்றியும் செயலாற்றுவதற்கான வழிகளை ஏற்படுத்திக்கொடுத்தல்.



மூத்தகுடிமக்கள் மற்றும் பணி ஓய்வுபெற்ற நபர்களுக்கேற்ற தொடர்கல்வித்திட்டங்களை வரையறுத்துக் கொள்ளவும், நிறைவேற்றவும் முயற்சி செய்தல்.

வாழ்நாள் முழுவதும் முன்னேற்றம் ஏற்படக்கூடிய வகையில் கல்வி கற்பிக்கும் முறைகளில் ஈடுபட்டு அறிவுத்திறன் மேன்மையடையக்கூடிய திட்டங்களைச் செயல்படுத்துதல்.

இது போன்ற திட்டங்களை நடைமுறைப்படுத்தும்போது மனிதநேயமுன்னேற்றம், திறன்முன்னேற்றம் போன்றவற்றை அடிப்படையாகக்கொண்டு செயல்படுதல் அவசியம். இதில் படிப்பறிவின் முக்கியத்துவம், அதன் மூலம் பெறும் உழைப்பு, புத்திக்கூர்மை, ஆன்மிக வளர்ச்சி போன்றவற்றின் மேம்பாட்டிற்கு வழிகாண வேண்டும். ஒன்றுபட்டு இணைந்த கல்விச்செயல்பாடுகளில் பெற்றோர், குழந்தைகள், இளைஞர் மற்றும் பெண்களின் பங்கு பற்றிய சிறப்புக் கவனத்தினை கருத்தில் ஏற்றுக்கொண்டு செயல்படுத்துவது அவசியம்.

அடிப்படைத்தகவல் Book: - Education at cross raods. Author:- Dr. Kireet Joshi, Ex-chairman, Auroville Governing Board. மொழியாக்கம் - சாய்பிரியா சிவகுமார்.

**(நமது இளைஞர்கள் கல்வி மையம் வாழ்நாள் முழுதும் கல்வி – முடிவுறாத கல்விக்கொள்கையையே அடித்தளமாகக்கொண்டு 46 ஆண்டுகளாக இயங்கி வருகிறது. வாழ்த்துங்கள் வாசகர்களே!**

## தமிழ்ப் பழமொழிகள்

### ப

1. பாடிப்பாடிக் குத்தினாலும் பதர் நெல்லாகாது.
2. பாம்புக்கு பல்லிலே விஷம்; பங்காளிக்கு உடம்பெல்லாம் விஷம்.
3. பார்த்தால் பூனை; பாய்ந்தால் புலி
4. பாராதே கெட்டது பயிர்; ஏறாதே கெட்டது குதிரை; கேளாதே கெட்டது கடன்.
5. பானை பிடித்தவள் பாக்கியசாலி; ஏர் பிடித்தவன் எசமான்.
6. பானையில் பதக்கு நெல் இருந்தால் மூலையில் முக்குறுணித் தெய்வம் கூத்தாடும்..

சு. சண்முகசுந்தரம் - சாகித்ய அகாதெமி வெளியீடு.

## நூலகம்

**பாரதி பாடிய மணக்குள விநாயகர் | முனைவர் சொ. சேதுபதி | செண்பகா பதிப்பகம், சென்னை. | 2021 | ரூ. 225.00**

ஸ்ரீஅரவிந்த அன்னையுடன் உரையாடிய விநாயகருடன் மகாகவி பாரதியின் ஞானஉரையாடல் அருமை. இந்நூலில் விநாயகர் நான்மணிமாலை நன்கு விளக்கம்பெற்றுள்ளது. பாரதியியலில் தொடர்ந்து ஆய்வு நூல்களை வெளியிட்டு வரும் பேராசிரியர் சொ. சேதுபதி, பாரதியின் கிருதயுகத்தினைக் கேடின்றி நிறுத்த விரதம் கொண்டுள்ளதை உணர்கிறோம். நல்ல தேடல். அருமையான பதிவு.

**பிரபஞ்சன் சில நினைவுகள் | ராஜ்ஜா | இனிய நந்தவனம் பதிப்பகம், திருச்சி | 2021 | 100.00**

நமது சகோதரர் பிரபஞ்சன் நினைவுகளாகிவிட்டார் என்பதை நம்புவதற்கு இந்த இடைப்பட்டக் காலம் போதவில்லை. அவரின் நட்புப் பக்கத்தை மிக்க உரிமையுடன் பேராசிரியர் ராஜ்ஜா நிரல் செய்துள்ள பாங்கு சிறப்பாக உள்ளது. சுதந்திரமான உணர்வுடைய ஒரு படைப்பாளியின் நெருக்கத்தில் பழகிய சிநேக அலைகளின் இனிய அதிர்வுகளைத் தாங்கியுள்ளது இந்நூல். நல்லதொரு நட்பு ஆவணம். மொழி நடை இயல்பாக உள்ளது. அச்சும், ஓவியங்களும், படங்களும் வாசிப்பிற்குத் துணைநிற்கும் வலுவான ஒத்திசைவுகள். நல்ல வரவு.

**ஸ்ரீஅன்னை பத்துப் பதிகம் | நித்ய பாரதி (இரா.இளங்கோ) | ஆரோபிமா, புதுவை | 2021 | 100.00**

ஸ்ரீஅரவிந்த அன்னையின் அன்பரான கவிஞர் நித்யபாரதி வருங்காலக் கவிதையை வரவேற்கும் விதமாக நித்யபாரதி எனும் ஆன்மிக இலக்கிய இதழைச் சென்ற 12 ஆண்டுகளாக நடத்தி வருகிறார். ஸ்ரீஅன்னையின் அருள்மொழிகளைத் தமிழில் பதிவு செய்துள்ளார். அவற்றின் தொகுப்பாக ஸ்ரீஅன்னை பத்துப் பதிகம் நமது நூலகம் சேர்ந்துள்ளது. ஆன்மநேயர்களின் வாசிப்பு அனுபவத்திற்கும் மன ஒருமைக்கும் உறவாகும் நல்ல அருள்மொழி நூல்.

### ஸ்ரீஅரவிந்தரின் சிந்தனை மணிகள்



எந்தக் கலங்களில் அமுதத்தைப் பெய்யலாம் என்னும் சொற்போர் நிகழ்கின்றது. இத்தகைய சண்டையை ஒக்கின்றன சமயச் சழக்குகள். அவர்கள் வாதங்கள் புரியட்டும். நாம் விழைவது அமுதைப் பருகி அழியாத்தன்மை எய்துவதே! அந்த அமுதம் எந்தக் கலத்தில் இருந்தால் என்ன?

செய்தித்துளிர்

11-ஆம் ஆண்டு களப்பணி பற்றிய விவரங்களை மின்னஞ்சல் வழி அனுப்பியுள்ள புதுவை டி. ஒய். சி.எல் சமூக நலப்பணியாளர்களுக்கு நமது வாழ்த்தும் பாராட்டும். இந்த நிறுவன ஊக்குநர் டாக்டர் சிவா. மதியழகன் திருமதி. சாரா இணையர் அண்மையில் அமெரிக்காவிலிருந்து வந்துள்ளனர், நமது பள்ளிக்கு வருகை தந்து டி.ஒய்.சி.எல் லுக்கும் (TYCL) நமது மையத்திற்கும் உள்ள நல் உறவுகளை மேலும் வலுப்படுத்தினர்.

கவிச்சக்கரவர்த்தி கம்பன் திருவிழா காரைக்குடியில் மார்ச் மாதம் 16 முதல் 19 வரை சிறப்பாக நடை பெற்றது. இவ்விழாவில் பல்துறை அறிஞர் பெருமக்கள், புரவலர்கள், புலவர்கள், கவிஞர்கள், கம்பர் அபிமானிகள் கலந்துகொண்டு சிறப்பித்தார்கள். கம்பர் சமாதிமுன் நாட்டரசன் கோட்டையில் நடைபெற்ற கவியரங்கில் நமது செய்திமடல் ஆசிரியர் குழுவிலுள்ள முனைவர் சொ. அருணன் கபிலன் கலந்து கொண்டார். நமது பாராட்டுகள்.

மார்ச் 29 உலக இட்லி தினமாக அனுசரிக்கப் படுகிறது! அண்மையில் நமக்குக் கிடைத்த தகவலின்படி விண்கலத்தில் செல்லும் விண்வெளி வீரர்களுக்கு இட்லிதான் சிறந்தஉணவு என்று ஆய்வு செய்து கண்டுபிடித்திருக்கிறார்கள். நம்முடைய இட்லிக்கு கிடைத்திருக்கிற கௌரவம். மேலும் இரண்டு இட்லிகளை சாப்பிடச்சொல்லுகிறது நமது தமிழ்ச்சுவை நாக்கு!

சிறுவர் இலக்கியம்

## ஆனை பாரு ஆனை பாரு

டண் டண் டண் டண்
டண் டண் டண் டண்
ஆனை பாரு ஆனை பாரு
ஆடி வரும் ஆனை பாரு
ஆல மரம் காலு
ஆட்டம் போடும் வாலு
டண் டண் டண் டண்
டண் டண் டண் டண்



## ஏழும் நல்ல வண்ணம்

வானவில்லு ஏழு நிறக்குடை விரித்தது
நிலாவில்லு வெள்ளைநிறக்குடை எடுத்தது
துளிமழையும் சூரியனுக்கு வில்லு போடுது
குட்டிப்பாப்பா ஏழுவண்ணம் தாளில் பூசுது
தாத்தாவுக்கு மூணு – வயலட், ஊதா, நீலம்
பாட்டிக்குமே மூணு – பச்சை, மஞ்சள், ஆரஞ்சு
பாப்பாவுக்கு ஒண்ணு – சிவப்பு நல்ல சிவப்பு
ஆக மொத்தம் கூட்டிப்பாத்தா
மூணும் மூணும் ஆறு
ஆறு ஒண்ணும் ஏழு
ஏழும் நல்ல வண்ணம்!



உஷாஅருணன்

## அறிவோம் நம் தமிழ் – I

### தமிழில் பழந்தமிழ்க் கலைச்சொற்கள்

**CLOTH**

நெய்யப்பட்ட துணி
உடை
ஆடை
உடுப்பு
காரை
கஞ்சிகை
காழகம்
கோடிகம்
தானை
மடி
ஒலியன்
இழை
பாரி (நல்ல ஆடை)
பட்டகம்
வண்ணடை
துகில்
வட்டம்
படங்கு | கோடி | கலிங்கம் |

**CLOUD**

மேகம் | கார் | முகில்
புயல் | பெயல் | புகார்
மங்குல் | மஞ்சு | மாகம்
மாசி | மால் | பாட்டம்
கமஞ்சூல் | கனம்
விசும்பு
தளி
குயின்
கார்
கொண்டல்
எழிலி

நன்றி; ஆங்கில – தமிழ் வகுப்பிற்குப் பயன்பட்ட அகராதி. International Advanced Deluxe Dictionary.

**தனிச்சுற்றுக்கு மட்டும்**

வெளியீடு : ஆசிரியர் குழு
ஆரோவில் செய்திமடல்
இளைஞர்கள் கல்வி மையம்
ஆரோவில் - 605101
விழுப்புரம் மாவட்டம்
தமிழ்நாடு

Unit of Sri Aurobindo International Institute of Educational Research

மின்னஞ்சல் : tamil@auroville.org.in
தொலைபேசி : 0413-2623773
ஆசிரியர் : இரா.மீனாட்சி
வடிவமைப்பு : சொ.அருணன், புதுவை.
அச்சு : சூர்யா பிரிண்ட் சொலூசன்ஸ், சிவகாசி.